8th August 1960]

SRI T. S. RAMASWAMI : ஹரிஜனங்களில் 74 ஆயிரம் பேர் மனுச் செய்து கொண்டிருக்கும்போது 59 ஆயிரத்திற்குத்தான் கொடுத்திருக்கிறார்கள். உத்தேசம் 15 ஆயிரம் மாணவர்களுக்கு ஏன் கொடுக்கப்படவில்லை? சாதாரணமாக அந்த பாரம் பூர்த்தி செய்வதில் தவருக எழுதியிருந்தால்கூட அதைத் திருத்தி அதன் காரணமாக நிராகரிக்கப்பட்டவர்களுக்கு உதவி அளிக்க ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜனங்களுக்குக்கூட நாம் எல்லோருக்கும் கொடுப்பது என்று அல்ல. ஒதுக்கப்பட்ட தொகைக்குத் தக்கபடிதான் கொடுக்கப்படுகிறது. மேலும் வேண்டுமென்றால் நிதி இலாகாவுக்கு எழுதி சாங்ஷன் பெற வேண்டும். சில மாணவர்கள் தப்பாகவும் பாரத்தை பூர்த்தி செய்து அனுப்புகிறார்கள். அப்பேர்ப்பட்டவர்களுக்குக் கொடுக்க முடியாது.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJU : இந்த அரசாங்கத்தினுடைய ஸ்காலர்ஷிப் பெறவேண்டுமென்பதற்காக பணக்காரர்கள்கூட ஏழைகள் என்பதாக சர்டிபிகேட் வாங்கி அனுப்பி உபகாரச் சம்பளம் பெறுகிறார்களே, அதைத் தடுக்க ஏதாவது நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI P. KAKKAN : ஏழை மாணவர்களுக்கு உதவி செய்யவேண்டும் என்பதுதான் உத்தேசம். பணக்காரர்கள் வரக்கூடாது என்பதுதான் அரசாங்கத்தினுடைய கொள்கையாகும். அதற்காகத்தான் அதிகாரிகள் சர்டிபிகேட் கொடுக்கும்போது பார்த்துக்கொடுக்கவேண்டும் என்று எச்சரிக்கப்பட்டிருக்கிறார்கள்.

* 15 Q.—SRI S. LAZAR :
SRI P. G. MANICKAM : } கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

17—2—1960-ல் நடைபெற்ற இம் மாநில அபிவிருத்திக் கமிட்டிக் கூட்டத்திலே, பின்னடைந்த வகுப்பினர் நலனுக்காகக் கொடுக்கப்படும் கல்வி சம்பந்தப்பட்ட உபகாரச் சம்பளங்களை ஆண்டு தோறும் ஜூலை மாத முடிவுக்குள்ளாக பட்டுவாடா செய்யப்பட வேண்டுமென்ற முடிவின்படி நடவடிக்கைகள் எடுக்கப்பட்டனவா?

THE HON. SRI P. KAKKAN : A statement[a] showing the action taken for the expeditious disbursement of scholarships is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : மேஜை மீது வைக்கப்பட்டிருக்கிற குறிப்பிலே ரின்யூவல் பாரங்களை மாணவர்களே வாங்கி, எழுதி தலைமை உபாத்தியாயரிடம் கொடுக்கவேண்டுமென்று இருக்

[a] Printed as Appendix I on page 126 infra.

கிறது. ஆனால் இப்போது இருக்கும் முறை என்னவென்றால் தலைமை உபாத்தியாயரே அதைப் பூர்த்தி செய்து வருவதுதான். ஆகவே மாணவர்கள் வழக்கம்போல் தலைமை உபாத்தியாயர் அனுப்பியிருக்கக்கூடும் என்று சும்மா இருந்துவிடலாம். ஆகவே இவ்வேற்பாட்டை தலைமை உபாத்தியாயர் மூலம் எல்லாப் பள்ளி களிலும் அறிவிக்க ஏற்பாடாகி இருக்கிறதா? உரிய பாரங்கள் எல்லாம் அனுப்பி வைக்கப்பட்டு, அம்மாணவர்களுக்குக் கொடுத்து பூர்த்தி செய்து வாங்கி தலைமை ஆசிரியர் அனுப்பியிருக்கிறாரா என்பதைப் பரிசீலனை செய்ய நடவடிக்கை எடுக்க முடியுமா?

**The Hon. Sri P. KAKKAN:** பாரங்களை எல்லாம் காலா காலத்தில் அனுப்ப தக்க ஏற்பாடாகியிருக்கிறது. எந்தப் பாட சாலையில் கொடுக்கப்படவில்லை என்ற தகவலைச் சொன்னால் தக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

**Sri S. LAZAR:** ஹரிஜன நல இலாகாவைச் சார்ந்த உதவிப் பணத்தைப் பெறுவது பொறுத்தவரையில் இந்த முறை இருக் கிறது. மத்திய சர்க்கார் உதவிப் பணத்தைக் குறித்தும்கூட இதே முறை கையாளப்படுமா என்று கேட்க விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN:** மத்திய சர்க்கார் உதவித் தொகை கொடுக்கும்போது என்ன கண்டிஷன் விதிக்கிறார்களோ அந்தக் கண்டிஷன்படி அது கொடுக்கப்படும்.

**Sri A. A. RASHEED:** Sir, may I know whether there is State allotment for each district or whether scholarships are awarded from one central pool?

**The Hon. Sri P. KAKKAN:** It is not allotted for each district.

**Sri A. VEDARATHNAM:** ஒருமுறை மாணவனுக்கு உப காரச் சம்பளம் கொடுத்தால் அது தொடர்ந்து வரும் என்று கனம் அமைச்சர் அவர்கள் கூறுகிறார்கள். ஆண்டுதோறும் அவர் களிடம் ப்ராபர்டி சர்டிபிகேட் கோரப்படுகிறது. கிராம உத்தி யோகஸ்தர்களிடம் இருந்து இந்த சர்டிபிகேட் வாங்குவது மிகவும் கஷ்டமாகப்போகிறது. "கடவுளிடத்தில் இருந்து கூட வாங்கிவிடலாம். கிராம அதிகாரிகளிடத்தில் வாங்க முடியாது" என்று முதல் அமைச்சரே சொல்லியிருக்கிறார். ஆகவே ஒன்று இந்த சர்டிபிகேட் எளிதில் கிடைக்கும்படி செய்யவேண்டும். அல்லது ஒரு ஆண்டு வாங்கிக்கொடுத்துவிட்டால் பிறகு அதை வற்புறுத்தி ஆண்டுதோறும் கேட்பதையாவது நிறுத்த முடியுமா?

**The Hon. Sri P. KAKKAN:** ஆண்டுதோறும் சர்டிபிகேட் வாங்குவதில் கஷ்டம் இருக்கிறது என்று நினைத்துத்தான் ஹரி ஜன நல அதிகாரிகள் சர்க்காருக்கு எழுதி, ஒருதரம் கொடுத்து விட்டால் கடைசி வரைக்கும் அந்த கோர்ஸ் முடிகிறவரையில் ஸ்காலர்ஷிப் கொடுக்கவேண்டும் என்று ஏற்பாடு செய்திருக்கிறார் கள்.

8th August 1960]

SRI P. G. MANICKAM : சர்க்கார் ஜுலை மாத முடிவிற்குள் ஸ்காலர்ஷிப்பை மாணவர்களுக்கு பட்டுவாடா செய்யவேண்டும் என்று மாநில அபிவிருத்தி கமிட்டி முடிவு செய்து தீர்மானம் போட்டிருக்கிறது. என்னுடைய கேள்வி அதன் பிரகாரம் கொடுக்கமுடியுமா என்பதுதான். சென்ற வருடம் ஸ்காலர்ஷிப் தொகை மார்ச் மாத கடைசியில்தான் கொடுக்கப்பட்டது. அம்மாதிரி இல்லாமல் இந்த வருஷம் ஜுலை அல்லது ஆகஸ்ட், செப்டம்பருக்குள் பட்டுவாடா செய்வதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI P. KAKKAN : காலதாமதத்தைப் போக்கி எவ்வளவு துரிதமாக ஸ்காலர்ஷிப் கொடுக்கமுடியுமோ அவ்வளவு சீக்கிரம் கொடுக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

SRI S. LAZAR : உதவி மானியம் மத்திய சர்க்காராலும், மாநில சர்க்காராலும் கொடுக்கப்பட்டு வருகிறது. காலதாமதம் என்பது பொதுவாக இருக்கக்கூடிய குறை. மாநில சர்க்காரைப் பொறுத்தவரை ஒரு புதிய முறையைக் கையாளுகிறார்கள். ஆனால் மத்திய சர்க்காரால் ஏற்படும் காலதாமதத்திற்கு இந்த அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : மத்திய சர்க்கார் உதவியை நேரடியாக கொடுக்கிறார்கள். அதனால் காலதாமதம் இருக்காது.

SRI A. GOVINDASAMY : வருமான சர்டிபிகேட் கொடுப்பதில் சில தாசில்தார்கள் காலதாமதம் செய்கிறார்களா? அம்மாதிரி காலதாமதம் செய்யாமல் உடனடியாக கொடுப்பதற்குத் தாசில்தாருக்கு சர்க்கார் உத்தரவு போடுவார்களா?

THE HON. SRI P. KAKKAN : தாசில்தார் பணக்காரர் யார்? ஏழை யார் என்று கண்டுபிடிப்பதிலே கொஞ்சம் காலதாமதம் ஏற்படும். அப்படி அவர்கள் நன்றாக ஆராயாமல் கொடுத்து விட்டால் அவர்களின் வேலைக்கே ஆபத்தாக முடியும்.

*New Bus routes in South Arcot district*

* 16 Q.—SRI K. GOPALA KOUNDER : கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தென் ஆற்காடு ஜில்லாவில் 1959-ம் வருஷம் ஏப்ரல் 1-ம் தேதி முதல் 1960-ம் வருடம் மே மாதம் 1-ம் தேதி வரை 15 மைல்களுக்கு உட்பட்ட பஸ் ரூட்கள் எத்தனை சாங்ஷன் செய்யப் பட்டன?

(ஆ) இவைகள் தாலூகாவாரியாக எந்தெந்த ரூட்டுகள்?

THE HON. SRI V. RAMIAH : (a) Three.

(b) (i) Tindivanam Taluk—Tindivanam to Rettanai.

(ii) Kallakuruchi taluk—Kallakuruchi to Koothagudi.

(iii) Tirukoilur taluk—Ulundurpet to Aladipalakkollai,